# திருக்காட்சி

சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது



அன்பு நிலயம்,
இராமச்சந்திரபுரம் : : திருச்சி ஜில்லா

 1942 [விலை அணா 4

79/2

மனிதர் அறிவும் மகளிர் அன்பும்.

உ

காப்புக்கட்டுப் புதுமை
அன்பளிப்பு

விஷு ஆண்டு தைமீ ௨௨ (19-1-42)

நெற்குப்பை
திரு. சோம. லெ. இலக்குமணன் செட்டியார்
மகள்
திருவளர் செல்வி - சிகப்பி
காப்புக்கட்டுப் புதுமையில் வழங்கப்பெற்றது.

To T.R. Chockalingam esq.

# பதிப்புரை

இவ்வரிய பாமலர் கவிச்சுவையும், கலைச்சுவையும், அருட் காட்சி யின்பமும் சேர்ந்தது. **சுவாமி சுத்தானந்த பாரதியார்** கன்னியாகுமரிக்கு, 1924-ஆம் ஆண்டு, குருகுல மாணவருடன் சென்றிருந்தார் ; குமரி சக்தியின் தரிசனம் கண்டு பரவசமடைந் தார். கோயிலுக் கணித்தாயுள்ள எல்லையற்ற குமரிக்கடலையே அவர் நாளெல்லாம் பார்த்துப் பார்த்து மனம் பூரித்தார். நல்ல நிலா வீசும் இரவின் அமைதியில், அடிகள் கன்னியாகுமரிக் கட்டத் தில் அமர்ந்து, அகண்டமாக அலை வீசியெழும் கடற்காட்சியைத் தியானித்திருக்கையில், அவரது கவிக்கனவில் பாரததேவியின் திருக்காட்சி உதித்தது. பாரதமாதாவின் புண்ணியப் பெருமை யும், அவள் இக்காலம் படும் இடர்களும், உலகில் அசுரபலங்கள் செய்யும் அட்டூழியமும், பாரத தர்மம் தனது தெய்விகமான பர மாத்ம சக்தியால் அசுரமாயத்தை விலக்கி, உலகில் அமரவாழ்க் கையை நிலைநாட்டும் காட்சியும் அவர்முன் உதித்தன. அதன் பயனாக, அந்த நிலாவிலேயே இக் காவியத்தை எழுதுகோலால் எழுதிப் பிறகு குருகுலத்தில் ஸ்ரீ வ. வெ. சு. ஐயரிடம் படித்துக் காட்டினார். ஐயர் இதைப் **பால பாரதியில்** வெளியிட வாங்கி வைத்திருந்தார். அடிகள் குருகுலத்திலிருந்து விடைபெற்றுச் **சமரஸ போதினி** ஆசிரியராகத் தஞ்சாவூருக்குப் புறப்படும்போது, இப்பிரதி பாலபாரதி நிலயத்திலிருந்து கிடைத்தது.

**சக்தி பரவசம்** என்னும் ஆவேச அகவல் குமரித்தாயின் சந்நிதியிற் பாடப்பெற்றது.

எந்தாய் வாழ்க !

இராமச்சந்திரபுரம்,
1—1—1942.

**அன்பு நிலயத்தார்.**

எண் : சஙு (கக)–க–க000

# திருக்காட்சி

## க. கன்னித் தவம்

கன்னி தவக்காட்சி, கண்குளிரக் கண்டுவந்தே,
தென்கடலின் முன்பு தியானத் தமர்ந்தனிசி;
கள்ளார் மதிநிலவின் காதல் வெறியேறி,
வெள்ளித் திரைமார்பு விம்மிப் புரண்டலைய,
முத்துக் கரத்தால் 'முழுமதியே வா!'வென்று
பித்துப் பிடித்தார்க்கும் பெருங்கடலோ டென்னுளத்தில்,
தாய்நாட்டின் அன்புத் தணல்வெள்ளந் தானெழுந்து,
வாய்மைச் சுதந்தரமாம் வான்மதியை 'வா!'வென்னும்!
முத்துமுத் தாக முளைத்தொளிருஞ் சிந்தனைகள்,
சித்தத் திரைகளெல்லாந் 'தேசமே வாழி!'யென்னும்! ௧௦

*　　　*　　　*　　　*

பாருக்கு ஞானப் பரிதியே, மெய்யறத்தின்
வேருக்குப் பாலூற்றே, வேதாந்த வீணையிலே
தேவர்கள் மீட்டுந் திருநாமச் சீர்த்தியளே,
பாவிப்பார் பாவனைபோற் பாலிக்குங் கற்பகமே!
ஆவி யுருகியுள் ளார்வமுடன் உன்னருளைக்
கூவி யழைக்குங் குழந்தைமுறை கேளாயோ!
கன்னி முனையினிலுங் கௌரி முடிமீதும்
அன்னையே நீசெய் யருந்தவங்கை கூடிலதோ?
உன்கோயில் இன்றேன் ஒளிமழுங்கிற் றென்னம்மே?
உன்வேத வாக்குகளும் ஊமைமணி யாயினவோ? ௨௦
கல்வி யொளியிழந்து, கண்ணிழந்து, கைக்கணியாஞ்
செல்வத் தொழிலிழந்து, திண்டோள் வலிவிழந்து,
தீராத வெம்பிணிகள் தேய்க்கும் உடல்சுமந்து
பாரால யத்திற் பரிதவிக்கும் மக்களைநீ
காப்பாற்ற வேண்டும், கருணைபொழி விண்ணமுதே!

பூப்பாரந் தாங்கும் புகலே பராசக்தி!
எங்கும் ஒருபொருளென் றேயுணரும் உன்குலத்துத்
தங்கக் குழந்தைகளுஞ் சாதிமதச் சிக்கல்களால்
ஒன்றுபட்ட வாழ்க்கை யுடைந்து பகைபேசித்
துண்டுபட்டு வீழுந் துயர்தீராய், செந்திருவே! ௩௦
இச்சையுள்ள போகமெல்லாம் ஈந்துவளம் பொங்கிடுமுன்
பச்சைவள நாட்டினிலே பஞ்சம் புகுந்ததென்னே!

* * *

கண்ணன் குழல்கேட்டுக் காராம் பசுகறக்கும்
புண்ணியப் பொன்னாடு பொலிவிழக்கப் பார்ப்போமோ?
விண்ணிழந்து மண்ணிழந்து, வீரக் கனவிழந்து,
பண்ணிழந்து நல்ல பதமிழந்து நிற்போமோ?
வேத முனிவர் விளைத்தசுப மங்கலமாம்
நாத மடங்கி நமனோசை கேட்போமோ!
புத்தரின் சாந்தமயப் புன்னகையைக் காண்கிலமே?
சித்தர்களின் செய்ய திருவடிகள் காண்கிலமே? ௪௦
நெஞ்சத் துறவுடனே நீதிசெய்அ சோகனெங்கே!
அஞ்சா தறஞ்செய் அனபாய சோழனெங்கே!
பொற்கை வழுதியெங்கே! போற்றூர் நடுநடுங்கும்
விற்கை விசயனெங்கே! வேல்பிடித்த கந்தனெங்கே!
சாகா வரம்பெற்ற சச்சிதா னந்தமயர்
யோகநிட்டை செய்தருளும் உன்சே வடிநிழலிற்
பேராசைப் பூதங்கள் பெய்த்தெம்மை யுண்ணுவதோ!
பாராசைப் பேய்கள் பகடை யுருட்டுவதோ?

* * *

வீர சிவாஜிக்கு வெற்றிதந்த சக்தியன்னே,
தீரன்குரு கோவிந்த சிங்கனுக்கு வீறுதந்த ௫௦
சண்டி, பவானி, ஜயகாளி, அன்புவெறி
கொண்டலறு மன்பனையாட் கொள்ளாய்! இராமக்ருஷ்ண

தேவருக்குக் கல்லாத் திருஞான வூற்றீந்தாய்,
ஆவலுடன் என்னுள்ளம் அல்லும் பகலுமுன்னைக்
கேட்கும் வரமறிந்துங் கேளா தொளிவாயோ !
ஆட்கொண்ட தாயின் அருளிதுவோ, ஆஹாஹா !

* * *

உன்னரசும் உன்னறமும், உன்புகழும் ஓங்கிடவே
என்னையுனக் கர்ப்பணித்தேன், எந்தாயே, யின்னுமென்னைச்
சோதிக்க வேண்டா, சுடர்மணியே, யென்விரதஞ்
சாதிக்க வல்லதொரு சக்தியருள் ! மக்களெல்லாம் ௬0
அஞ்ஞான நீங்கி யகண்ட சுதந்தரராய்
மெஞ்ஞான மோங்கி, மெலிவகன்று வாழ்க ;
வறுமை, யடிமை மடமை யிடர்தீர்க !
சிறுமை பொறுமைவிளை தீமைகளைப் போக்கிடுவாய் !
பற்றுக்கொண் டுன்னருளிற் பாரெல்லாம் ஓர்குலமாய்
ஒற்றுமைகொண் டோங்க வொருவழிசெய் யென்றிறைஞ்சி
அன்னை யருளையெதிர் யான்பார்த் திருக்கையிலே,
புன்னகைக்குஞ் சந்திரனாற் பொய்குங் கடல்வெள்ளம்
அத்தனையு முத்தாய், அரதனமாய், பொன்மணியாய்
வைத்து வடிவமைத்து வான முடிசூடி, ௭0
எங்குந்தா னாகி, யிடமெல்லாந் தன்னெழிலாய்க்
கங்குல்பக லில்லாத காட்சியொன்று கண்ணாரக்
கண்டேனெந் தாரகத்தைக் காதல் விழிகளினால் !
வெண்டா மரையடியில் வீழ்ந்தேன்ஓம் சக்தியென்றே !
யாதா லுவமிப்பேன் யான்கண்ட பேரழகை !
மாதா வுடனேதோ மழலைமொழி பேசிநின்றேன் !
மின்மினியைக் காட்டியிது விண்விளக்க மென்பதுவோ !
புன்னுரையின் சித்திரத்தாற் பூரதியைக் காட்டுவதோ !
கையா லிறைத்துக் கடலாழங் கண்டிடவோ !
வையம் படைத்தவளை வாயா லளந்திடவோ ! ௮0

ஆற்று மணலே யமுதாக்கும் பாலரைப்போல்
காற்றுடி யாகாசக் கப்பலெனும் பிள்ளையைப்போல்,
யானுமென்றன் புன்கவியை யன்னையுரு வென்பேனே!
மோன முழுப்பொருளை முன்கண்ட யோகியர்போல்
ஆனந்த வெள்ளத் தழுந்தி யுளஞ்சிலிர்த்தேன்.
தானந்த மில்லாத சக்தியெழி லென்சொல்வேன்!
ஒன்று பலவாகிப் பலவும் ஒருங்காகி,
நின்ற பிரமமிந்த நேரிழையாய் வந்ததுவோ!
வேதங்கள் ஓம்என்று விளம்பி யுரையிறந்த
போதமய மென்றன் புலன்காண வந்ததுவோ! க0
தேவ ரமுதந் திருவுருவங் கொண்டதுவோ!
ஓவாவின் ணின்பம் உடல்கொண் டுயிர்ப்பதுவோ!
காலைப் பவளத்திற் காட்டுங் கதிர்ச்செம்பொன்
போலத் திருநகையும், பூத்தவெண் டாமரையில்,
நீல மணிபதித்து நீள்கயலைப் போற்புரளும்
கோல விழிக்கருணை கொண்டு பசிதீர்ந்தேன்.
தகதகெனக் காந்துகின்ற தங்கத் தளிர்மேனி,
முகமதியி லேகுலுங்கு மோகனச் சௌந்தரியம்;
கார்கொண்ட மின்னருவி காணு மலர்க்கூந்தல்;
பார்வாழ மன்பூற்றுப் பாயும் பயோதரங்கள்; க00
தாரா மணிகோத்த தாமத் தடமார்பு;
பேராழி யென்னப் பெருகிவரும் வான்கருணை
பொங்கும் விழிகளிலோர் பொன்னுலகங் கண்டுவந்தேன்.
பங்கயத் தாளிற் பரமுமிக முங்கண்டேன்;
"அறம்வெல்க" வென்றார்க்கும் அம்பொன் னடியில்
மறைமுழங்கி யெல்லா மதத்தினரும் அன்புமலர்
தூவி வணங்குகின்றார் தொண்டுவழி பாடுசெய்தே;
ஆவியினு மேலாகும் அன்னை திருப்புகழை,
மாந்தருடன் விண்ணவரும் வானெட்டப் போற்றுகின்றார்;
வேந்தர் பணிகின்றார்; வீரத் திருவாளர் கக0

கோடிமின்னலைப்போற் கொடிகள் உயர்ந்தாடப்
பேடிக்கும் ஆண்மை பிறக்கஜய பேரிகொட்டி,
சந்திரக் கூட்டம்போற் சாமரைகள் வீசுகின்றார்;
'எந்தாய்நீ வாழி! யெமதரசி வாழி!' யென்றே
ஆர்கலித்துப் போற்றுகின்றார்; ஆனந்தக்கூத் தாடுகின்றார்;
தார்தொடுத்துப் போட்டுத் தமிழ்முழக்கஞ் செய்கின்றார்;
காண்டிபமுங் கோதண்டக் கார்முகமுஞ் சக்கரமும்
பூண்ட படைசூழப் பூரணகும் பம்பொலியச்
செல்வத் திருவுடனே செய்ய கலைவாணர்
பல்லாண்டு பாடுகின்றார்; பன்னீர் தெளிக்கின்றார்; ௧௨௦
ஆடு மயில்களுடன் அன்னக் குழாங்களைப்போல்,
பாடிசுப மங்கலங்கள் பைங்குழையார் சூழுகின்றார்;
தெய்வ மணங்கமழும் தேன்வாய் மலர்திறந்து,
வையம் புகழ வரம்பெற்ற மெய்ப்புலவர்
'போற்றி, ஜய போற்றி!' யெனப் பூமாரி, பாமாரி,
காற்றெல்லாம் வாசங் கமகமக்கத் தூவுகின்றார்!
கங்கைசிந்து, கோதாரி, காவேரி, வைகைவளர்
பொங்கும் பசுவளமும், பொன்னார் கனிவளமும்,
வெள்ளி யிமாலயமும், விந்தியமும், தென்மலையும்,
அள்ளித் திருவளமும், ஆனைதை கான்வளமும், ௧௩௦
தென்னாழி முத்தும், திரள்பவள மும்,சுரங்கப்
பொன்மணியுங் கொண்டு, புலவர்செய்த கைவளமும்
காவியமுங் கூத்துங் கனிமதுரக் கீதமுடன்
ஓவியமும் போன்ற உயர்ந்த கலைவளமும்
சூழ விளங்குகிறாள் சொற்கரிய அற்புதமாய்
ஆழி முரசதிரும் அழகுமணிக் கோயிலிலே!

* * *

திக்கெட்டும் வீசித் திகழுந் திருவழகிற்
சொக்கி மனமிறந்து சொல்லிறந்து தாள்பணிந்தேன்!

ஆஹாவுன் னற்புதம்போல் யாங்குமில்லை என்றுபெரும்
மோகமுற்று நிற்கையிலே மூண்டதொரு பேரிருளே! க௪0

* * *

கண்செய்த பாவமோ! காணேனவ் வைபவத்தை:
கண்பெற் றிழந்தவன்போல், கானகத்தில் அந்தகன்போல்,
புண்பட்டு வாடுகின்ற போதிலே, நேர்மாறாய்
மண்ணி லரக்கவலி வாளாயு தந்தாங்கி,
அட்டூழி யத்தால் அழித்துயிரை ஆதிக்கம்
பெற்றுளைக் கண்டு, பெருங்க வலைகொண்டேன்.
"வெறிபிடித்த நாத்திகர் வேதத்தைத் தீயில்
எறிகின்றார்; ஆங்காரித் தெக்காளஞ் செய்கின்றார்!
கள்ளைக் குடித்துக் கனல்போலக் கண்சிவந்து,
தெள்ளறிவைத் தாமிழந்து செய்யா தனசெய்வார்! க௫0
தேவதைகள் சக்தித் திருவென்னப் போற்றுகின்ற
பூவையரைச் சிற்றின்பப் பொம்மையெனப் பாவிப்பார்;
தாயன் பிழந்தார்; தருமத்தைக் கற்பழிப்பார்;
பேய்போற் பிறர்பொருளைப் பிய்த்துண்டு கொக்கரிப்பார்.
மாவிடத்தோல் போர்த்த வரிப்புலியர், பேய்நாயர்,
ஓநாயர் வஞ்சநரி யுள்ளம் படைத்தவரே,
நாடுதொறு மல்கி 'நமதே யுலக' மெனக்
கேடுசெயப் புக்கார்; கெட்டும் அவர் உணரார்!
மண்ணாசை கொண்டு மனிதர்களை மாய்த்திடவே
பண்ணிக் கொலைக்கருவி பௌதிகச் சூழ்ச்சியினால் க௬0
விண்ணேறிக் குண்டுகளை வீசுவார் கூசாமல்;
மண்ணெல்லாம் புண்ணீராய், மானிடர்பி ணக்காடாய்,
வையஞ் சுடுகாடாய், வாழ்வெல்லாம் சாங்குரலாய்ச்
செய்து மகிழ்ந்து செயபே ரிகையடித்துக்
கொண்டாட்டத் தோடு கொலுவிருப்பார் மன்னர்; அதைக்
கண்டு தருமங் கலங்கி நிற்கும் அப்பாலே!
மண்வெறிப் போர்கள்; மதவெறிசெய் வெம்போர்கள்,

பெண்வெறிப் போர்கள், பெயர்புகழ்செய் சொற்போர்கள்,
ஆயுதப் போர்கள் அகந்தைப் பகைநீட்டுங்
காகிதப் போர்கள், கனகப் பெரும்போர்கள், கஎ0
சூறு வளியிற் சுழன்றேடும் பஞ்செனவே
மாறுப்பே ராசைப் பெருஞ்சுழலில் மாந்தர்மனம்
தோய்ந்து தினம்புரியுந் தொல்லைகளுஞ் சள்ளைகளும்
ஓய்ந்தபா டில்லை; யொருவருக்கு மின்பமில்லை.
கையா லுழைத்துண்போர் கஞ்சியின்றிப் பஞ்சமுற,
வெய்யபொறிச் சாமான்கள் விற்றிடவே, மற்றவரின்
நாட்டைக் கடையாக்கி நலிக்குங் கொடுமையினை
எட்டி லெழுதுவதேன்! எங்குமே காண்கின்றேம்!

* * *

இப்படியுங் கால மிருக்குமா, தாயே!" யென்(று)
அப்படியே தம்பித்தேன்; ஆங்கே தடதடெனக் கஅ0
கோடி யிடிமுழங்கக் கோபப் புயல்வீச,
நாடி நடுங்க, நரவுலக மெங்கணுமே
போர்மூளக் கண்டேன்; புகைமூண்டு மூச்சடைத்தே
பார்திகைக்கக் கண்டேன், பரிதாப மென்சொல்வேன்!
ஊழிவெள்ளம் போலே யூற்றுங் குருதிவெள்ளம்,
ஆழியெல்லாஞ் செந்நீர்; அவனி பிணக்கும்பல்!
மேற்குங் கிழக்கும் வெடிமருந்துச் சாலைகளே!
தோற்கும் அசுரபலம் துன்பப் புயல்வீசும்;
ஆணவ மாயம் அடியோடு மண்ணுகும்
பாணவே டிக்கையெல்லாம் பாராது பார்த்திருந்தேன்! கக0
ஆங்கேபார்! ஆஹாஹா! அன்னை மகாகாளி
ஹுங்காரஞ் செய்தே 'ஒழிந்த ததர்ம' மென்றுள்!

* * *

அக்கணமே வந்தாளென் ஆனந்தத் தாயமுதம்!
சொக்குத்தங் கம்போற் சுதந்தரப் புன்னகையாள்!
'காப்பாற்ருய் தாயே, கருணைத் தடங்கடலே!

காப்பாற்றாய்!' என்றிந்தக் காசினிவாழ் மாந்தரெல்லாம்
பாரதத்தாய் காலிற் பணிந்து முறையிடவே,
தாரகமாம் எந்தாய், தருமச்செங் கோலுயர்த்தி
அருலகிற் கெல்லாம் அபயமளிக் கக்கண்டேன்,
போரொழிந்து மாந்தர் புதுவாழ் வுறக்கண்டேன். உ00
சண்டைப் புயலாற் சகத்தி லறமழித்த
மண்டைக் கருவங்கள் மறையவுள் ளன்பர்களைக்
கொண்டிங்கு தெய்வக் குலம்வளர்த்தாள் சக்தியன்னை!
கண்டேன் உலகினிலே காணாத காட்சியெல்லாம்!
புத்தப் புதுவுலகம்! புத்தப் புதுமாந்தர்!
சித்தத்தி லானந்தத் தேனூறுங் காட்சிகளைக்
கண்டேன் புதுவசந்தக் காலத்தைப் யெப்பொழுதும்;
கண்டேன் புதுயுகத்தைக் காதல் விழிகளினால்!
ஆணுள்ளும் பெண்ணுள்ளும் ஆண்டவனும் சக்தியுமே!
மானுலக மெல்லாம் வளர்தெய்வ மந்திரமே! உ௧0
தாரணியின் வாழ்வெல்லாம் சக்திசிவ லீலைகளே!
காரணமுங் காரியமுங் காட்சித் திருவருளே!
சாதி மதபேதத் தடங்காணேன்; எல்லாரும்
ஆதிப் பரம்பொருளின் அன்புக் குழந்தைகளே!
தன்னலங்க ளில்லை! சகம்பொதுவே யாவருக்கும்;
மன்னன் மனச்சாட்சி; வாழ்வெல்லாம் அத்யாத்ம
யோகமே; விண்ணின் ஒளிவீசுஞ் சுத்தசிவ
போகமே யாகப் பொலிகின்ற தெங்கெங்கும்;
கலைகள் பழுத்துக் கனிகுலுங்குங் கற்பகமே
உலகமோ, விண்ணோ, உரைகடந்த காட்சியிதோ! உஉ0
ஆங்கே பரவசத்தில் ஆழ்ந்திருக்கும் போதினிலே,
ஓங்குஜய பேரி யொலித்தெழுப்பித் தென்கடலும்,
'வாழ்கமஹா பாரதமே! வானுலக ரக்ஷகியே!
வாழ்கபரா சக்தி! வாழ்கபரா சக்தி"யென்றே
முத்தலைகள் வீசியின்ப மூண்டுகூத் தாடியதால்...!

தத்திமிதோம் வெற்றியெனத் தாளங்கள் போட்டு
நடமாடி னேன்யானும்; ஞானமெலாம் எந்தாயின்
கொடியாடக் கண்டேன்! கொழுந்துவிட்ட தின்பவெறி!
போற்றிஜய போற்றி புவியரசி பாரதியே!
போற்றி ஜயபோற்றி, புதுயுகத்தின் செஞ்சுடரே! உ௬0

---

## உ. சக்தி பரவசம்

சக்திஓம் சக்தி ; சுத்த சக்திஓம் ;
இத்தினம் உன்புகழ் இசைக்கப் புகுந்தேன் :
சொல்லரும் உனது சோதி வடிவை
நினைத்து நினைத்து நீரா யுருகும்
அன்பருள் ஒருவன் யானென் றறிவாய் !
என்பெரும் ஆர்வம் ஈதலுன் கடனே !
வாக்கும் நீயே, வளர்கவி நீயே,
ஆக்கும் கவியின் ஆவியு நீயே !
அம்மா யானோர் யாழென வுன்கை
சும்மா நிற்கிறேன் ; சுருதி செய்து, க0
அருவிபோல் இசைகள் ஆர்ப்பாய், தேவி...!
உன்கைக் குழலாய் உள்ளேன் அம்மையே !
என்னுளுன் உயிர்ப்பை யென்றும் பொழிவாய்
கள்ள மில்லாக் காலை போலே,
தெள்ளிய வுள்ளம் தெரிந்திட நிற்பாய் ;
சித்தந் தெளிந்து, தித்தணல் போலுன்
பத்தி யெழுந்து, பகைவினை சிந்தி,
மடவிரு ளகன்று, மமதை யொழிந்துநான்
நிடமன துடனே, தேவியுன் அருளே
தாரக மாகத் தவம்பல செய்தேன் ; உ0
அத்தவப் பயனும் அம்மையே வுன்னை
என்றுந் துதிக்கும் இன்பந் தந்தாய் !
முக்குணப் போரில் சிக்கிச் சிதையா
சாந்த வுறுதி தருவாய் சிவையே !
கார்கடல் போலென் கருத்திற் பொய்கும்
ஆர்வ மெல்லாம் யாரிடஞ் சொல்வேன் !
நாட்பல சுற்றி நலிந்தேன் முறையைக்
கேட்பவ ரின்றிநீ கேட்டிடச் சொல்வேன் :

இமயச் சிவனர் இன்ப நடஞ்செயும்
தமிழகம் வாழத் தவஞ்செயுங் கன்னியே, ௩௦
அருணத் திருவே, அலைகடல் போலே
கருணை விரிவே! காட்சிக் கினிய
இயற்கை யெல்லாம் இறைவியுன் விளக்கம் ;
வானம் உனது ஞான விரிவாம் ;
நட்சத் திரங்களுன் நன்மணிப் பூணும் ;
சந்திரன் உனது தரளமில் லாக்காம் ;
மேகம் உனது மெல்லிய கூந்தலாம் ;
அருவி மாமழை அருளின் பெருக்காம் ;
மலைகள் உனது மாண்பின் வடிவாம் ;
காடுகள் உனது கவின்பெறு வனப்பாம் ; ௪௦
பூக்கள் உனது புன்னகைத் திரளாம் ;
கனிகள் உனது கைதரு விருந்தாம் ;
பறவைகள் உனது பாட்டின் மெட்டாம் ;
குயில்கள் உனது குரலின் எதிரொலி;
கிளிகள் உனது கிளர்வாய் மொழியாம்,
அன்னம் உனது அணிநடை யாகும்.
மாமரைக் காடுன் மலர்முகப் பொலிவாம்,
குவளைக் காடுன் கோமள விழியாம்,
முல்லை யரும்புன் முத்துப் பற்களாம்,
பாதி மதியுன் பரந்த நெற்றியாம், ௫௦
இந்திர வில்லுன் இணைந்த புருவமாம்,
மீனினம் உனது வெண்விழி ; வண்டுன்
கருவிழி ; அம்புன் கடைவிழி யாமே !
இரவும் பகலும் இமைகள் உனக்கே ;
நெருப்பெலாம் உனது நெற்றிக்கண் பொறி,
இடமெலாம் உன்றன் எல்லையில் உடலாம்,
ஆகாய விரிவுன் அளவிலா வுள்ளம்,
உயிரெலாம் உன்றன் ஓயா வுயிர்ப்பாம் ;

உலகமுன் ஆடல் ஓங்கும் கோயிலாம்,
ஆடலும் பாடலும் அழகும் கலையுமுன் ௬௦
நவரசங் காட்டும் நாடக விளக்கமாம்;
முக்குணம் உனது மும்மனப் பான்மையாம்,
பூமி யுனது பூந்தடந் தேராம்,
காலமே யுனது கடுவிசைப் புரவியாம்,
இரவியும் மதியும் இரதசக் கரமாம்,
வாழ்வெலாம் உனது வழிநடைக் காட்சியாம்,
முத்தொழில் உனது மூன்று விளக்கமாம்,
போரெலாம் உனது பொங்குஞ் சினமாம்,
அமைதியெல் லாமுன் அருளின் விளக்கமாம்!
சிவேஸ்வரி, அகண்ட ஜீவேஸ் வரிநீ! ௭௦
புவனேஸ் வரிநீ! புவனங் கடந்த
துரியாம் பிகைநீ! சுத்த சக்திநீ!
நீயே முக்தி, நீயே சித்தி!
உன்னை யன்றி உயிரெனக் கில்லை;
உலகமும் இல்லை உள்ளமும் இல்லை.
என்னை ஈன்ற இறைவி! யுனக்கே
வாழ்வை யெல்லாம் வழிபா டாக்கினேன்.
உன்விளை யாட்டே, என்விளை யாட்டாம்.
தினகரன் போலத் திருவருள் பொழியும்
வாய்மனங் கடந்த மஹேஸ்வரி நீயே! ௮௦
தாவிப் பறக்கும் தவத்தி யாலே
பகைவரைச் சாடும் பத்திர காளிநீ!
திருவுஞ் செல்வமுஞ் சேரவென் வாழ்வைக்
காவிய மாக்குங் கமலை நீயே!
நிய னேனையுந் திருத்திப் பூரணம்
பொருந்த வைக்கும் அருங்கலை நீயே!
அன்பருக் கன்பும் அரக்கருக் கழிவும்,
தூயருக் கொளியும், துரியருக் கின்பமும்

உதவி யருளும் யோகாம் பிகைநீ!
அடிமைத் தளையை அறுக்கும் விசைநீ ! ௯0
மடமை யிருளை மாற்றும் சோதி நீ!
சித்தந் தெளியுந் திவ்விய மருந்து நீ!
உலகெலாம் என்னை ஒருங்கே வெறுக்கினும்,
" கவலைப் படாதே, கண்ணே!" யென்றென்
மனத்துயர் மாற்றும் மாதா நீயே!
முக்குணப் போர்கள் முற்றுகை போட்டும்,
இராக்ஷஸப் படைகள் இரத்தவாள் சுழற்றியும்,
இடும்பைக் களத்தில் இன்னற் படுமெனை,
" அஞ்சேல் மகனே, அபயம் கொடுத்தேன்!"
என்றெனைக் காக்கும் இரக்கம் நீயே! ௧00
அடியருக் குன்முகம் அமுதினும் இனிதாம்;
கொடியருக் குன்முகங் கூற்றினுங் கொடிதாம்!
பண்டிதர் போற்றும் பழங்கவி யறியேன்,
வாயில் வந்ததை வாரிக் கொட்டுவேன்.
தாயெனும் உரிமையால், சேயெனும் அன்பால்,
பறவை போலும், பரவை போலும்
பாட்டுப் பாடிப் பரவு கின்றேன்;
அல்லிக் கரத்தால் ஆசிர் வதிப்பாய்!
மாங்கனி வாயால் வாழ்த்துரை சொல்லாய்!
செம்மலர்ப் பாதம் சென்னியில் வைத்தேன்! ௧௧0
சதங்கை யொலியாற் சஞ்சலந் தீர்ப்பாய்!
அருவி மலைபோல் அமுதக் கலம்போல்
எழுந்த மார்பில் இரக்கம் பொங்கி,
ஆளுடைப் பிள்ளைக் கருளிய பாலை
அளித்தெனை யுன்றன் அருட்சே யாக்காய்!
தண்ணருள் பெருகும் புண்ணிய நோக்கால்
என்குறை தீர்ப்பாய்! எண்ண மெல்லாம்
உன்னில் நாட்டும் உயர்வெனக் கருளாய்!

உண்மை யொளியினை உள்ளத் தேற்ருய்!
இறைவி, யுன்றன் இச்சை யெப்படியோ கஉ0
அப்படி யேயென் ஆவியை நடத்தாய்!
எனக்கொரு சித்தமும் இனிமே லில்லை.
எனக்கெனச் செயலும் இல்லை இல்லை!
மனமொழி மெய்யெலாம் உனதே கொள்வாய்!
சிற்றறி மானிடன் செய்கையென் னறிவேன்?
எல்லாம் அறிந்தநீ எனைக்கொண் டாளாய்!
உடலுயிர் மனத்தில் இடர்ப்படும் உயிர்க்கோர்
தாரகம் நீயே, சரணும் நீயே!
காமக் குரோதக் கடும்புயற் கடலில்
ஜீவத் தோணி சிக்கிய போது, கஙO
மாலுமி யாக வந்தெனைக் காத்தாய்;
மருளை நீக்கக் குருவாய் வந்தாய்,
துறைசேர் வேகத் துடுப்பாய் நின்ருய்;
பேதையேன் எனக்கும் வேதம் விளக்கினுய்!
கலையறி யாத கசடன் எனக்கும்,
பால வயதிற் பாட்டொன் றளித்தாய்!
புலமை யில்லாப் புல்ல னேனையும்,
உரை யடங்கிய ஊமை யேனையும்,
உன்கவி யூறும் ஊற்றே யாக்கினை!
கிதையின் பொருளைக் கிளத்தினை! என்கை கச0
தாயுமா னவரைத் தந்தறி வூட்டினை!
அப்பர் சுந்தரர் ஆளுடைப் பிள்ளையார்
மாணிக்க வாசகர், வளர்த்த தமிழை
அளித்ததன் அருளிற் குளித்திடச் செய்தாய்!
திர்க்க தரிசிகள், மார்க்க தரிசிகள்
கண்ட நல்வழி காட்டினை நீயே!
உள்ள தெல்லாம் உனக்கே யுரிமை!
எள்ளள வேனும் எனக்கென நினையேன்...

நாசியை வருத்தி, நாக்கைக் கட்டி,
வாசியை யடக்கி, வளிநிலை கண்டு, ௩௰
உடலை மடக்கிக் குடலைக் குறுக்கி,
நீண்டயோகம் நிகழ்த்தியும் பயனிலேன்...
அகந்தை யின்றியுன் அடிமலர் பிடித்தபின்
சகத்தையும் உயர்ந்த சத்தையும் காட்டினை!
இகமும் பரமும் என்னுட் காட்டினை!
கடலை ஆறு கலப்பது போலுன்
கருணைவெள் ளத்திற் கலந்த பிறகு
சாதன மாயினை, சக்தி யாயினை;
சித்தி யாயினை, முத்தியாயினை;
உன்னை யன்றி உலகெனக் கில்லை; ௪௰
உன்னுள மின்றி உய்வெனக் கில்லை;
அன்னைநீ யின்றி ஆதர மில்லை;
அன்னைநீ யின்றி அசைவு மில்லை!
தேக வாழ்வை யோகவாழ் வாக்கினை!
சாகா மருந்தின் தத்துவ மளித்தாய்!
அவனி தன்னிலே அமரவாழ் வளித்தாய்!
யானுன் வீணை, நீயென் இன்னிசை;
யானுன் பூங்குழல், நீயென் பாட்டு;
யானுன் மெல்லுடல், நீயென் ஆவி;
யானுன் இருகண், நீயென் பார்வை; ௫௰
யானுன் பாத்திரம், நீயென் அருட்பால்;
யானுன் இதயம், நீயென் துடிப்பு;
தாயே, எனக்குத் தந்த வரத்தை
உலகிற் கெல்லாம் உதவி யருளாய்!
அம்மே, உலகின் அழிவைக் கண்டால்
நெஞ்சழிந் துருகி, நெட்டுயிர்த் தழுவேன்.
அடஞ்செய் தீமைகள் ஆயிரம் புகுந்தன;
தாசி வெறியால் தாயை உதைக்கும்

நீசப் பதர்போல் நிலைகெடு மாந்தர்
தாயை மறந்தார், தாய்மொழி பேணார், கஅ0
தாய்நா டெண்ணார், தன்னலம் வேட்பார்;
வீர மற்றார், கூரம் பிழந்தார்,
தீர மற்றார்; இனிக் கலைவதே
வாழ்க்கை யானார்; வயிற்றின் அடியார்!
சுத்தசன் மார்க்கச் சுடரொளி காணார்;
சத்தம் போட்டுச் சாதிகள் பேசுவர்!
அன்னிய வலையில் அகப்பட் டழிவார்;
தம்மவர் தம்மைத் தகைபெற மதியார்!
மீண்டுமென் னாட்டார் நீண்டெழுங் கனல்போல்
வீர தீரராய், வித்தகச் சித்தராய் கசு0
எழுந்து நின்றுன் இன்னரு ளாலே
அறமும், பொருளும், அகப்புற நலமும்,
காத லின்பமும், கடவு ளின்பமும்,
வீட்டு நன்மையும், நாட்டு நன்மையும்,
அருளும் ஆண்மையும், அன்பும் பண்பும்,
இண்ட லில்லாக் கேண்மையும் போற்றி,
வண்டு போல வளம்பெற வுழைத்து,
உலகெலாம் புகழ நிலவிட வருளாய்!
செஞ்சொலுக் கரிய சிந்தனை மிகப்பல
நெஞ்சில் இருப்பதை நீயே யறிவாய்! உ00
உன்முன் விரிந்த வுலப்பிலாக் கடல்போல்
எனமுன் அருட்கடல் இலகிநான் அதனில்
ஆடிப் பாடி, அரனைத் தினமும்
கூடித் தொண்டு குலவிட வருளாய்!
தமிழுந் தமிழருந் தமிழக வளமும்,
அமுதும் தேவரும் அமரநா டும்போல்
தெய்வப் பொலிவுடன் சிறந்து விளங்கவும்,
சைவந் துலங்கவும் சக்தி யளிப்பாய்!

போற்றி, போற்றி, பூரண சக்தி!
வான்முக டெட்ட வளர்கனின் கொடியே! ௨௪௦
உதயம் போன்ற புதுநகை யுடையாய்;
இதயந் தோறும் இலகுங் கனலே!
ஆர்கலிப் பெருக்கினும் அன்பு மிகுந்தாய்;
கார்மழை தன்னினும் கருணை சிறந்தாய்;
விண்ணொளி யாயென் விழியாற் காண்பாய்;
பண்ணொலி யாயென் பனுவலைப் புனைவாய்;
மண்புவி வாழ்வில் மடத்துயர் செய்யும்
புண்ணெலாந் தீரப் புன்னகை புரிவாய்!
பதகர் வீட்டுப் பஞ்சரக் கிளிபோல்
இதமில் லாரின் இரும்புக் காலடி ௨௫௦
அடிமையாய் வருந்தும் கொடுமையைத் தீர்ப்பாய்.
மிடிபிணி களைவாய், மேன்மை யளிப்பாய்!
முன்மொழி தொன்மொழி முத்தமிழ் மொழியை
இன்னுல கெல்லாம் இசைமொழி யாக்காய்!
வாடிய தமிழ்ப்பயிர் வளம்பெறச் செய்வாய்,
பாடிய பனுவல் பயன்பெறச் செய்வாய்,
முத்துப்போல மொழிநய மருளாய்;
வாக்கில் சக்தி வளம்பெற வருளாய்!
மேற்குங் கிழக்கும் மெச்சிப் புகழத்
தென்கலை புதிய மங்கலம் பொலிய, ௨௬௦
நன்கலை யருளாய்! நால்வர் போலே
மந்திரம் பாடி வழிபட வருளாய்!
சிந்தையி லூறும் தேனே, பாலே,
இந்து மூரிமுன் இலகுங் கன்னியே,
செந்தமிழ் காக்கும் தெய்வமே,
உன்னடி சந்ததம் சரணும் சக்தி!

---